# எழிலன் கவிதைகள்

36

வலம்புரி எழிலன்




மீனாட்சி புத்தக நிலையம்
60 மேலக்கோபுரவாசல்
மதுரை

விற்பனை உரிமை:

பாரி நிலையம்
59. பிராட்வே · சென்னை 1.

எதிர்காலம் புகழைச் செய்யும்.

—பாரதிதாசன்.

*ஜனவரி—1952.*

# அறிமுகம்

நல்லதோர் இளங்கவிஞரை நாட்டுக்கு அறிமுகப்படுத்துவதிலே பெருமை கொள்ளுகிறேன். எளிய இனிய பாடல்களைத் தேனூறும்செந்தமிழில் யாத்து நம்மை—நம் உள்ளத்தை—உணர்ச்சியைத் தாய்த் தமிழ் ஈர்க்கிறதா அவர் பாடிய பாடல் ஈர்க்கிறதா என்று கூறுதற்கியலாதவாறு அமைத் திருப்பது அவரது திறத்துக்கு எடுத்துக்காட்டு.

சங்க இலக்கியங்களில் ஊன்றித் திளைப்ப தோடு அவ்விலக்கியங்களைப் போற்றி வளர்ப் பதிலும் மிக்க ஆர்வம் கொண்ட நண்பர் பல் லுடைக்கும் கடின நடையைவிட்டு மிகமிக எளிய நடையைக் கையாண்டிருப்பது என்னை மகிழ்ச்சியிலாழ்த்தியது.

**எழில் விளக்கு, காதல்** போன்ற பாடல்கள் வாழ்க்கையோடு இணைந்து நம்மை இன்பத்தி லாழ்த்திப் பலகாலும் நினைந்து மகிழ மனதில் பதிந்து நிற்கிறது.

கவிஞர் மிக இளைஞர். தமிழிலும் கலையிலும் பற்றுக் கொண்டவர். மொழியையும் நாட்டையும் உயிரென மதிப்பவர். திறம் மிக்க இவர் எதிர் காலத்தில் சிறந்த கவிஞராக விளங்குவார் என்பது என் நம்பிக்கை.

அன்பன்,

**கண்ணதாசன்.**

# பாராட்டுரை

கவிஞர் எழிலன், நல்ல உணர்வும் ஊக்கமும் உள்ள இளைஞர். அவர்தம் உணர்வும் ஊக்கமும் பொலிவாக்கப்பட்டால் இதனினும் இனிய படைப்புகளைப் படைக்கலாம்.

முயல்க! வளர்க! வாழ்க எழிலன்!!

**வாணிதாசன்.**

12—5—1957.

## ஒரு சொல் கேளீர்......

தென்னகத்தின் முப்பெருங் கவிஞர்கள் என் முயற்சியைப் போற்றி வளர்க்க முனைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு என் உயிர் ஒன்றுபட்ட வணக்கத்தைச் செலுத்தி பெருமிதம் நிறைந்த நன்றிக் கண்களோடு தமிழகத்தைப் பார்க்கிறேன். புலவர் பெருமக்கள் வளர்த்துவிட்ட என்னைத் தாயகத்தார் ஆதரிப்பர் என்ற நம்பிக்கையோடு !

அன்பன்,

**வலம்புரி எழிலன்.**

# படையல்

தொல்லை பல சூழ்ந்து
துயருற்று ழன்றபோது
அல்லல் களைந்து
அன்பு முகம் கொடுத்துப்
பாசத்தால்—
பண்பு நிறை உள்ளத்தால்
தோள் கொடுத்துக் காத்த
தூயோன் ஒருவனுக்கு !

லெ. திருப்பதி.
(வலம்புரி எழிலன்)

**குறிப்பு :** தென்றல் என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில் எட்டாம் வரியில் "தட்டித் தழுவுதடி" என்றிருப் பதைக் ***கட்டித் தழுவுதடி*** என்றும், இந்நூலின் இறுதிப் பக்கத்தில் "இந்நாவலாசிரியரின்" என் றிருப்பதை ***இந்நூலாசிரியரின்*** என்றும் திருத்திப் படிக்கவும்.

# தமிழ்த் தாய் வணக்கம்

சங்கத் தமிழ் போற்றி
புலமை நயம் போற்றி
எந்தயர் வழி போற்றி
இறவாத் தமிழ் போற்றி
மறவர் புகழ் போற்றி
இயற்றிடும் இச் சிறுகவிதை
இன்பத்தால் எழில்நயத்தால்
ஏற்றமுற்று விளங்கிடவே
என் அன்னை தமிழ்த் தாயை
இறைஞ்சுகின்றேன் பலமுறையும்.

# தமிழ்

இளம்பரிதி எழில் கண்டேன் ;
அவ் வெழிலுக்கீடாக எதனைச் சொல்வேன் !
மலைஅருவி வந்துவீழும் வனப்பைக் கண்டேன் ;
அவ்வனப்புக் கீடாக எதனைச் சொல்வேன் !
அலைகடலில் நீலஒளி அழகைக் கண்டேன் ;
அவ்வழகுக் கீடாக எதனைச் சொல்வேன் !
ஈடில்லா இயற்கைஎழில் பலவும் கண்டேன் ;
இன்பமிகு தீந்தமிழின் எழிலைப்போல,
தீஞ்சுவையாய்த் தேன்மலராய்த் தித்திக்கும் செங்
கரும்பாய்
மகிழ்வூட்டும் தமிழைப்போல் எங்கும் நான்
காணேனே !

# தமிழ்க் காவியம் கற்றிட வாரீர் !

1. 'பஞ்சினும் மெல்லிய பாவை
கொஞ்சிடச் சேர்ந்த நற்கன்னம்
குலவிடச் சிறந்த நல்அதரம்
நிமிர்ந்திட நின்றிடுங் கொங்கை
நேரிடை உராய்ந்திடும் நற்றோள்கள்
பார்க்க மருண்டிடும் கண்கள்
காரியமேகக் கருங்கூந்தல்
காலிடைத் துவண்டு புரளுதல் பாரீர் !

2. பார்த்ததும் வாளா இருப்பதும் நன்றோ ?
பாவையைக் கூடிட நினைப்பதும் தவறோ ?
தீதெனக் கூறுவார் உண்டோ ? தென்தமிழ்
நாட்டவர்பால் அவர் உளரோ ?
இணைந்திடச் சிற்றிடை உடையாள்
இயல் இசை நாடகத் தமிழாள்
பூவினும் மெல்லிய நங்கை
புணர்ந்திடச் சுகந்தரும் போதையைக் காணீர் !

3. காலிடை ஒலித்திடும் சிலம்பு
காதிடைப் புரண்டிடும் குண்டலம்
துடி இடையினில் அணிந்தநல் மேகலை
முடிதனில் விளங்கிடும் மாமணி

கைகளில் மின்னிடும் வளையல்
காண்பவர் உளம்மிக மகிழ்ந்து
கருத்தினில் இணைத்திட நினைந்து
தமிழ்க் காவியம் கற்றிட வாரீர் !

# சுவர்க்கத்தைக் கண்டாள் !

திருமணம் என்ற சொல் செவியினில் ஏறும் போதும்,
மணவிழா முடிந்த பின் மனமொத்து வாழும் போதும்,
கணவனின் அன்பிலே சிக்கித் தவித்த போதும்,
கருவுற்றேன் என்று பெருமையாய்ச் சொல்லும் போதும்,
குழவி ஒன்றை ஈன்றுவிட்டாள் குலக்கொடியாள் என்னும்
காணாத இன்பத்தைக் கண்டாள் ! [போதும்,
கரம் சூப்பி மைந்தன் சிரிக்கும் போது !
மாமழலைச் செல்வன் வாய்முத்துதிரும் போது !
தத்தி நடந்து மெத்தக் குறும்புடன்
பொத்தென விழுந்து " அம்......மம்......மா " என
நடை பயில முயலும் போது ! [அழும்போது !
இல்லத்தரசி சிரித்தாள் ! மகிழ்ந்தாள் !
இன்பத்தால் தாக்குண்டாள் !
கரம் நீட்டிக் குழந்தைதனை வாங்கி
" இச் " சென்று முத்தம் பல ஈந்து மகிழ
எழுந்து வந்த கணவனிடம்
" என் செல்வன், உங்களிடம் தரமாட்டேன்,"
என்று மறுக்கும் போதும்
இன்பத்தைக் கண்டாள் ; இல்லை சுவர்க்கத்தைக்
கண்டாள் !

# எழில் விளக்கு

தலைவன் : ஆங்கோர் பழம் பார் !
அதை நாம் உண்டிடலாம் வா வா

தலைவி : உண்மையில் அது பழம்தானே
ஒளிச்சுடரோ தெரியவில்லை.

தலைவ : ஒளிச்சுடரோ நற்பழமோ
உண்மையதைக் கண்டிடலாம்.

*(விட்டில்பூச்சி தன் துணையுடன் விளக்கின் அருகில் வந்து)*

தலைவ : தீப்பிழம்பு அல்ல இது
தீங்கனிதான் என்றாலும்
முன்னே சென்றுள்ளே
முழு உண்மை தெரிந்திடுவேன்
பின்னே அழைக்கின்றேன்
பேடையே நீ வருக என்றான்.

*(ஆண் விட்டில் விளக்கினுள்ளே சென்று ஒளிச் சுடரை உண்ண முனையும்போது சுடர் சுட்டு ஒரு இறக்கை எரிந்து விடுகிறது. இறக்கையை இழந்த விட்டில் விளக்கி னுள் வெப்பம் தாங்காது துடித்துக் கொண்டு கிடக்கிறது.)*

தலைவ : ஐயையோ, உன்பேச்சைக் கேட்காது
ஓடி வந்தேன் நானிங்கே
உணவில்லை, பழ மில்லை,
ஒளிப் பிழம்பே தான் என்றான்.

தலைவி : ஐயையோ, ஒளிப்பிழம்பா
ஓடி 'வாங்கள்' என் அத்தான்

தலைவ : வெளியில் வர இயலாமல்
வேகிறதே என் உள்ளம்
இறக்கை யொன்று போயிற்று
எழுந்து வர இயலவில்லை
அனலாய்க் கொதிக்கிறது
அங்க மெல்லாம் வேகிறது
பிணத்தின் பெரு நாற்றம்
பெருமூச் சடைக்கிறது.

தலைவி : ஐயையோ என் அத்தான்
என்ன செய்வேன் நான் அத்தான்
புழுவாய்த் துடிக்கும் உங்கள்
பொன்னுடலைக் காப்பாற்ற
அனலாய் இருந்தாலும் என்
அங்கமெல்லாம் எரிந்தாலும்
காற்றாய்ப் பறந்து வந்து
கருகுமுடல் காத்திடுவேன்.

தலைவ : அன்பே ! ஒளியே ! என்
அழகுமனை ஒளிவிளக்கே !

பெண்ணே ! மனையே !
பேரழகின் இருப்பிடமே !
என் கண்ணே ! மணியே !
காதலியே நீ வாராய் !
பட்டான உன் மேனி
பகட்டான நல்ல முகம்
சுட்டுக் கரிந்துவிடும்
சுடரொளியாம் தீபத்தால் !
ஐயையோ, காலெல்லாம் தீயால்
கரிந்து எரிந்து போயிற்றே !

தலைவி : என் செய்வேன் என் செய்வேன்
என் இதயம் துடிக்கிறதே !
அன்பு செய்யும் என் தலைவ
அலறித் துடிக்கிறீரே !
என்புருகிப் போகிறதே என்
எழிலுடலம் வேகிறதே !
துணை செய்ய வாரேன் நான்
தடையேதும் சொல்லாதீர் !

தலைவ : பேசும் பசுங்கிளியே
பேரழகு ஓவியமே
வேண்டாம் நீ இங்கே
வெளியிலே இருந்துவிடு.

தலைவி : எரிகின்ற தீயிலே
எரிந்துருகி நீர்வாட

எரியாத பெருந் தீயில்
இருந்து நான் வாடேனே.

தலைவ : உள்ளே நீ வாராதே
ஓர்நொடியில் மாண்டிடுவாய்.

தலைவி : என்னுடலம் எரிந்தாலும்
எழிலுடலம் தீய்ந்தாலும்
என்னுயிரைத் தீயவிடேன்
எனதன்பைச் சாகவிடேன்.

தலைவ : இனியும் நான் பிழைப்பேனோ
உடலெல்லாம் எரிந்த பின்னே !

தலைவி : உயிர் மட்டும் இருந்தாலே போதுமத்தான்
உமக்கெல்லாம் செய்திடுவேன்
உடலாய்நின்று

தலைவ : ஐயையோ ! சாகிறேனே எனதன்பே
உன் முகத்தைக் காணாமல் போகிறேனே.

தலைவி : இதோ வந்தேன்! சுடரொளியை அணைத்து
உம்மைக் காக்கின்றேன் நான்.

தீபச் சுடரொளியே ஈதென்ன நியாயம் ?
இன்பப் பிணைப்பிலே மகிழ்ந்திருந்த காதலரைத்
துன்பத்திற் குள்ளாக்கித் துண்டு துண்டாய்
நிறுத்திவைத்துச்
சோகத்தைக் கண்ணீர்ச் சுருதியுடன் பாடவைத்துக்
கீதமெனக் கேட்டு மகிழ்ந்தாயோ ?
ஏன் உனக்கு இந்த ஒளி ? ஏன் உனக்கு இந்த எழில் ?
எழில்விளக்கு என்ற திருநாமம் ஏன் ? ஏன் ? ஏன் ?

# அறிந்தவர் யார் ?

கண்ணெட்டுந் தூரமட்டும்
கருநீல நிறமாய்த் தோன்றும்
விண்ணெட்டுந் தூரமட்டும்
விரைந்தெழும் அலைகள், நல்ல
பாக்களைப் பாடி, அந்த
மனத்தினில் ஒளிந்திருக்கும்
அழகினைக் கூறும்,
வண்ணக் காவியம் தொடுக்க
நல்ல கருத்தாய் அமையும்
அந்தக் கருத்தினை யார் அறிவார் ?
நாட்டினைப் போற்றும் நல்ல
அறிஞர்கள் உள்ளத்திலும்
காட்டினைப் போற்றும் நல்ல
ஞானிகள் உள்ளத்திலும்
வீட்டினைப் போற்றும் நல்ல
மாதர்கள் உள்ளத்திலும்
எழிலினைப் போற்றும் நல்ல
கவிஞர்கள் உள்ளத்திலும்
அடுக்கடுக்காய் மலரும், ஆனால்
அகத்தினில் ஒளிந்திருக்கும்
ஓவியர் மனத்தில் மின்னி

ஒளிர்விடும் எழிலைப்போல !
மாங்கனிக் கன்னத் தோடு
மான்விழி இரண்டும் சேர்த்துச்
செம்பவள மூக்கிேைடும்
சிறந்தநல் அதரத்தோடும்
சிந்திய முத்தைக் கொண்டு
சேர்ந்தநல் வரிசைப் பல்லும்
நூலினைப் பழிக்கும் மிக்க
நுண்ணிய இடையிேைடும்
துள்ளிடும் வாளை எனத்
தோன்றிடும் தொடை இரண்டும்
காரிருள் போல நல்ல
கருங்கூந்தல் வனப்பும் சேர்ந்து
எழிலுரு மாதைக் கண்டால்
ஏற்படும் உணர்ச்சி வெள்ளம்,
தூயநல் மனத்தினில்
துயர்தரும் இன்ப வெள்ளம்,
உள்ளத்தில் எழுந்தெழுந்து
உவகையை மிகுதியாக்கும்
இல்லத்தில் நிலைத்து வாழ
அல்லல்பல ஏற்கும் நெஞ்சம் !
பொல்லாத வனப்பினுலே
உள்ளம் பொசுங்கியே போகும்
பின்னர் நினைத்திடும் பொழுதெல்லாம்
நெக்கு நெக்காய் உருகு மன்றே ?
அந்த உண்மையை யாரறிவார் ?
அறிந்தோரே சொல்லுவரோ !

# இன்ப விளையாட்டு !

நாட்டியம் ஆடவேண்டும் !
நல்லிசை பாடவேண்டும் !
நாணமும் மடமும் வேண்டும்
அச்சமும் பயிர்ப்பும் கொண்டு
அடங்கியும் வாழ வேண்டும் !
இச்சகம் விரும்பும் வண்ணம்
இல்லத்தில் வளமை தங்கப்
பலபணி புரிய வேண்டும்
பாரினில் பெருமை தங்கப்
பாவையர் வாழவேண்டும் !
அழகான மேனி வேண்டும்
அங்கங்கள் பொலிவு பொங்கித்
தங்கத்தைப் பழிக்க வேண்டும் !
செங்காந்தள் விரல்களிலே
செந்நிற வண்ணம் பூசி
வளைந்திடும் மணிக்கரத்தில்
வளைபல அணிய வேண்டும்
வேய்போலும் தோள்களிலும்
விளங்குகின்ற முலைகளிலும்
'தொய்யில்' எழுதவேண்டும்
பழங்காலக் கச்சம் நீக்கிப்

பார்வைக்கு நல்ல துயிலால்
உள்ளிய எல்லாம் தெரிய
ஒப்புக்கு அணிந்து
‘ உள்ளாடை‘ என்று சொல்லி
ஓர் துணியை உள்ளுடுத்தி
மெல்லிய துயிலால் சுற்றி
மேனியை மூடவேண்டும் !
மஞ்சளைப் பூசும் மாதர்
சந்திரன் ஒளியைப் பெற்று
மென்மையில் பஞ்சைப்போல
மேனியில் குளுமை காண்பார் !
சுண்ணும்பைப் ‘பவுட’ராக்கி
முகத்தினில் அதனைப்பூசி
கன்னத்தை—
மிளிரும் கதுப்பை—
கண்ணுடி முகத்தைக் கெடுத்து
நாகரீக மங்கையராய்
மஞ்சளை மறந்தார் !
முகத்தில் மீசைகள் அரும்பி
மென்மையைக் கெடுத்துச்
செத்த பிணத்தின் அழகைச்
சொத்தாக்கி வைத்தது !
கொவ்வை உதடுகளைக்
கொவ்வை நிறமாக்கச்
*‘செந்நிறக்குச்சி’ ஒன்ருல்

* லிப்ஸ்டிக்.

சிவப்பேற்றி மெருகிட்டு
எச்சிலோ, நாக்கோ
இடறிப் படா வண்ணம்
மிக்க கருத்துடனே
அதைக் காப்பர்.
நாளடைவில்—
உதடெல்லாம் கருத்து
எரிந்தணைந்த கொள்ளிபோல்
கருகி உருக்குலைந்து
பெண்ணுதடோ—பேயுதடோ
என்றெண்ணும் நிலையில்
இருந்து சிரித்திடும் !
ஒள்ளிய கண்ணுக்கு
அஞ்சனம் தீட்டி
உயர்ந்த குதிச் செருப்பணிந்து
கண்ணுக்குக் கருநிறக்
கண்ணுடியும் மாட்டித்
தைலம் வளர்த்த கூந்தல்தனை
வாரி முடித்து
ஒய்யாரக் கொண்டை போட்டு
வலைபோல நூலால் சிறையிட்டு
மலர் அணிந்து மகிழ்ந்திடுவார்.
இத்தனையும் எதற்காக ?
ஆடவரின் இதயக் களிப்புக்காக !
உள்ளக் கிளர்ச்சிக்காக !
உணர்ச்சி வேட்கைக்காக !

இன்பூறும் சுரங்கமாய்
இருக்கின்ற பெண்டிர்கள்
ஆடவரின் கண்களுக்கு
அழகுத் திருவுருவாய்
பேரழகு ஓவியமாய்
பேரின்பப் பெட்டகமாய்
காட்சி அளித்து கதிகலங்க வைப்பதற்கு !
கற்பென்று ஒன்று வேண்டும்
அதனைக் கண்ணெனக் காக்கவேண்டும்
நம் தமிழ் நாட்டரெல்லாம்
நயமுடன் போற்றி வாழ்ந்த
"கற்"பெனும் திண்மை
இப்போ(து) காற்றிலே
பறக்கக் கண்டும்
பெருமை பல பேசுகின்றார் !
பெண்ணாய்ப் பிறந்த
பேதையர்க்கே கற்பு உண்டு
ஆடவராய்ப் பிறந்தோர்கள்
ஆடியலைந்து
பலர் மடியில் படுத்துப் புரண்டு
கேடு பல செய்தாலும்
கெடுதல் இல்லை(!)
என்று எண்ணி
ஆடுகின்றார் ஆடவர்கள் !
கற்பெனும் பெட்புத்
தென்னவரின் பொதுச் சொத்து !

ஆணுக்கும் பெண்ணுக்கும்
அது பிறப்புரிமைச் சொத்தாகும் !
ஏனோ இதனை
மறந்தார்கள் ஆடவர்கள் !
கண்ணிலே கண்டதெல்லாம்
கட்டி அணைக்க மனம் கொண்டார் !
ஆணினத்தின் மனத்திற்கு
அசைகின்ற பெண்ணினம்
குழைந்து கொடுத்துக்
குலத்தைக் கெடுத்தது !
பரத்தையர் குலமாய்ப்
பரந்து நின்று உலகில்
கற்புக்கு வைரியாய்க்
காட்சி யளிக்கிறது !
பெருநோயும் தொழுநோயும்
பெருகிப் பரவிப்
பேரின்ப வீட்டின்
பெருங்கதவைத் திறக்கிறது !
ஈதெல்லாம்—
இளமைநிறை வாலிபத்தின்
இன்ப விளையாட்டு !

# நிலவு

அந்தி மயங்கும் மாலைவேளை
செங்கதிரோன் ஒளிக்கதிரைப் பொறுக்கிக்கொண்டு
சென்றுவிட்டான் மலைக்குகைக்குள்
கிழக்கிலே கருத்திருந்த நீலவானம்
மெல்லச் சிவந்தது.
சிவந்தி மலர்போலச் சிரித்தது நிலவு
கடலன்னை ஈன்றெடுத்த குழந்தையவள்,
கருவினிலே எழிலுடைய நிலவரசி
குவலயத்தார் வாழ்வதனைக் காணவேண்டி
குறுநடையால் சுற்றிவந்தாள் உலகந்தன்னை !
தாய்மடியாம் கடலைவிட்டுச் சற்று எழுந்தாள்
கரைதனிலே அமர்ந்திருந்த கூட்டம் கண்டாள்
பயந்தாள்முன்னே ; இடுப்புவலி பொறுக்காத
எந்தன் தாயார்
தன்கரமாம் அலைகளினால் அறைந்து ஓங்கி
இரைந்திரைந்து ஓலமிட்டு அழுததனல்
ஊர்மக்கள் ஓடிவந்தார் ; என்றறிந்து அச்சம்
விடுத்தாள் !
வேதனையை உணர்ந்தவர் வேறுஏதும் செய்யாமல்
அருகமர்ந்தார்.
சற்று நேரத்தே என்னைப் பெற்றெடுத்தாள் அன்னை

செக்கச் சிவந்த தீச்சுடராய் நானிருந்தேன்
மக்கள் கண்டனர் ; மகிழ்ந்தனர் ; எழுந்தனர் ;
போயினர் ;
பின்னர் நான் சிறுநடை பயின்றேன் ;
மெல்ல நடந்தேன் ; வையகம் காண விழைந்தேன் ;
என் தாயிடம் விடைபெற்றேன் ; வானவீதியில்
வருகின்றேன் ;

வரும்பொழுது—
புன்னை மணற் பரப்பில் ஓரிளைஞன்
பொற்கொடியின் வருகைக்குக் காத்திருந்தான் ;
இரைதேட அலைகின்ற புலிபோல
இங்கு மங்கும் அலைந்திட்டான் அவ்விளைஞன்.
விநாடிக்கு விநாடி என் முகத்தைப் பார்த்து
வேதனையால் வாடுகிறான் ஓர் புறத்தே !

மற்றொருபுறம்—
தாழை மணற் பரப்பில் நல்லிளமைப் பெண்ணொருத்தி
காதலனின் வருகைக்குக் காத்திருந்தாள் ;
எந்தன் ஒளிபட்டு அவளுடலம் வேகு தென்றாள்
வெயில் நிறை ஒளியோ ? வெம்மை நிறை ஒளியோ ?
பகலவன் ஒளியோ ? எனப் பன்னினாள் பாவை.

வேறொருபுறம்—
ஓடி வரும் நல்லாற்றின் கரைதனிலே
ஒயிலாக அமர்ந்திருந்தாள் ஓர் கன்னி
அவள் அறியாமல் வந்துவிட்ட காதலன்தான்
வெடுக்கென்று கண்பொத்தி இறுகணைத்தான்
சுருக்கென்றதவள் உள்ளம் ;

கட்டி அணைத்த கைதனை விலக்கினுள் ;
நாணம் கௌவிக் கொண்டது அவளை ;
மெல்லிய புன்னகையை வீசிவிட்டு
மெல்லியலின் அருகமர்ந்தான் காதலனும் ;
இரவெல்லாம் ஏதேதோ பேசிப் பேசி
இன்பத்தால் நேரத்தைக் கழித்து வந்தார்.
தென்றல் எனை அங்கிருந்து இழுத்துவந்து
திறந்திருந்த சாளரத்தின் உள்ளே தள்ளி
கன்னியரும் காளையரும் ஒன்றுகூடும்
காட்சிதனைக் காணுய் நீ பெண்ணே என்று
பூட்டி வைத்தார் ; ஆனுல் ஐயோ,
உள்ளிருந்த இருவரையும் கண்டு விட்டேன்
ஓர் புறத்தே ஒதுங்கி நான் அமர்ந்து விட்டேன்,
வேறென்றும் கேட்க வேண்டாம் என்னை அந்தோ
வெட்கத்தால் தலை குனிந்தேன் நானும்தானே !

# விதவை

இறந்துபட்ட தலைவனின் பாதத்தின்கீழ்
எழிலுருவாய் ஓர்மங்கை அழுகின்றாளே.
தேன்மொழியாள் அழுகுரலைக் கேட்காதங்கே
செவிடன்போல் கிடக்கின்றான் தலைவன்தானும்
தீதறியாத் தமிழ் மங்கை பொட்டழித்தாள்
திலகமிலா நெற்றியிலே பொலிவைக் காணோம் ;
செங்கமல வாய்திறந்து பேசும் கிள்ளை
செந்தமிழை மறந்துபோனாள் ; ஊமையானாள் ;
குமுதம்போல் மலர்ந்தமுகம் அவளுக்கில்லை
குழிதோண்டிப் புதைத்துவிட்டாள் மலர்ச்சிதன்னை
மருளுகின்ற மான் விழியில் பார்வை யில்லை
பளிங்குபோல் உருளுகின்ற கண்கள் மட்டும்
கண்ணீரை உகுத்ததுவே கடலை ஒப்ப !
நேரிளமை நேரிழையாள் நேர்ந்ததெண்ணிச்
சீறுகின்ற மனத்திற்கோ அமைதி யில்லை !
சிரிக்கின்ற எதிர்கால வாழ்வை எண்ணிச்
சிந்தைமிக நொந்துவிட்டாள் பேதைப் பெண்ணாள் !
மனைவிதனை இழந்துவிட்ட ஆணொருவன்
நாணமின்றி மறுமணமும் செய்துகொள்ள
சுற்றமெல்லாம் சூழ்ந்துநல் வாழ்த்துக் கூறும்.
பெண்ணொருத்தி கணவனையே இழந்து விட்டால்

பேதையவள் சாகும்வரை நைந்துருகி
'விதவையவள்', 'மூதேவி' என்ற பல்லோர்
முணுமுணுப்புக் காளாகிச் சாக வேண்டும்!
தீதான வாழ்க்கை நெறி முறிந்து நல்ல
அமுதான வாழ்க்கை நெறி மலர வேண்டும்
ஆணைப்போல் பெண்ணுக்கும் சம உரிமை
வாழ்க்கை நலம் பலவும் தந்து;
இன்போடு வாழவேண்டும் நம்மனோர்கள்.

(வேறு)

பூவில்லாப் பொழிலாய்; நீரில்லாப் பொய்கையாய்;
பொருளில்லாப் பாடலாய்; நிலவில்லா வானமாய்;
பசுமையில்லாச் சோலையாய்; பழுக்காத கனி மரமாய்;
வாழ்விழந்த பெண்ணொருத்தி வாடுகின்றாள், அந்தோ!

# தை பிறந்தது!

தையும் பிறந்தது வழியும் பிறந்தது
எல்லேஇல் இன்பம் எங்கும் பிறந்தது
உள்ளம் மகிழ்ந்தது உலகம் மகிழ்ந்தது
சுற்றமும் மக்களும் சேர்ந்து மகிழ்ந்தனர்
இல்லம் புதுக்கினர் ; அல்லல் களைந்தனர்
செல்ல மக்களைத் தட்டி எழுப்பினர் ;
இள மென் கூதலில் எழுந்தனர் மக்கள்,
குளித்தனர் ; முழுகினர் ; குதித்தனர் மகிழ்ந்து ;
புத்துடை உடுத்துப் பொலிவுடன் விளங்கி,
முத்தமிழ் பலவும் முழக்கினர் ;
கதிரவன் கரங்கள் நீண்டு விரிந்தன.
பொன்ஞெளிக் கதிரவன் மின்ஞெளிபட்டு
மெல்ல மலர்ந்தன தாமரை ; குவளே
மலரும் பிறவும் மலர்ந்தன ;
வண்டுகள் இசைத்த தீந்தமிழ்ப் பண்ணின்
இனிய ஒலியில் மயங்கி விரிந்தன ;
சிற்றிடை நல்லாள் மெல்ல நடந்தாள்
படுக்கை யறையினுள் நுழைந்தாள்
தலேயும் காலும் நன்ருய் மூடித்
தூங்கிய கணவனேத் தொட்டாள்,
மெல்லிய உதடுகள் “ அத்தான் ” என்ற

பண்ணை இசைத்தன.
பொந்து மரத்தின் புழுவைப்போல
மெல்ல நெழிந்தான் தலைவன்.
மீண்டு மோர் முறை " அத்தான் " என்ற
பாவினைக் கேட்டான்.
கண்கள் விழித்தன ;
பொன்னிற மேனியில் மஞ்சள் பொலிவு,
புத் தொளி வீசும் மெல்லிய சிரிப்பு
செவ்விதழ் அதரம் நெழிந்து நெழிந்து
சிவக்கச் சிவக்கச் சிந்திடும் சிரிப்பை
கண்டான் ; மகிழ்த்தான் ; உண்டான் கண்களால்.
விரிந்த நெற்றியில் மெல்லிய புருவம்
சற்றே வளைந்தது ; திலகத்தின் எழில்
தெளிவாய்த் தெரிந்தது.
அன்புருவான பெண்மை அங்கே
தங்கச் சிலையாய் நின்றது. " என்ன,"
என்ற சொல்லினை வீசி மெல்ல எழுந்தான் தலைவன்,
சன்னலைமூடிய மெல்லிய துணியை அகற்றினாள்,
ஆத்திரம் கொண்ட கதிரவன் அங்கே தாவினான்
சன்னலின் வெளியே பார்த்தான் தலைவன் ;
ஆடின பாடின மயிலும் குயிலும்,
ஓடின ஆடின சேவலும் பெடையும்
கோழியும் குஞ்சும் ஒன்றாய்ச் சேர்ந்து
குப்பை மேட்டில் கொத்திப் பொறுக்கின
தலைவியை அருகில் அழைத்துத், தலைவன்
கையை நீட்டிக் காட்டினான்.

செந்நிற மேனியில் வெள்ளிய புள்ளி
சிதறிக் கிடந்தது வானம் போல !
மானின மெல்லாம் ஆணும் பெண்ணுமாய்
அங்கும் இங்கும் துள்ளித் திரிந்தது.
மங்கல மனைகளில் பொங்கிய பொலிவு
திங்கள் முகத்தினில் பிரதிபலித்தது.
எல்லா மனையிலும் நல்லறம் மிளிர்ந்து
இன்பம் பொங்கித் ததும்பி மகிழ்ந்தது
இசையும் கூத்தும் எங்கும் நிறைந்து
தமிழக மெங்கும் சிறந்தது.

# அறிவாய் நீயே !

இமயத்தின் வடிவம் போல் யானை ஒன்று
நடுத்தெருவில் பெருநடையாய் நடந்துவர,
பீரங்கி முழக்கம்போல் முரசின் ஒலி
பிரளயம் போல் மக்கள் கூட்டம் கூட்டிவர
நாளையே போர் என்ற நற்செய்தி
நானிலத்து மக்களுக்குத் தினவூட்ட
மறவர்படை திரட்டுகின்ற முரசின் ஒலி
களிற்றினது பிளிறலாகும் அறிவாய் நீயே !

# போய் வருக!

போரென்ற முழக்கம் கேட்டுப் புறப்பட்டான் காளைதானும்
கூர்வாள் எங்கே ? நல்ல கொடுவாள் எங்கே ?
என்று தேடினன். கூர்விழியாள் வந்தாள்,
என் வேல் விழி கொண்டு செல்க ; மாற்ருரை வெல்க ;
என்ருள்
உந்தன் விழி வேணடேன் ; வெறும் பார்வை ஒன்று
போதும் ; என்ருன்
பால் மொழியாள் சிரித்தாள் ; நற்பார்வை ஒன்று
போதுமோ ?
தேன் கலந்த வாயமிழ்தின் முத்தம் ஒன்று வேண்டாவோ?
சிந்தைக் கினியவளின் சொற்கேட்ட அடலேறு
சிந்தை மிக மகிழ்ந்தான் ; செவ்வாயில் பதித்தான்
ஓர் முத்தம்,
போதுமா என்கண்ணே, புறப்பட்டுப் போய்வரவா ?
என்ருன்
போய்வருக என் அத்தான் ; போர்க்களத்தில்
புலிநிகர் தடந்தோளால் போர்புரிக ; வெற்றிஎன
வருக ; இன்றேல் வீழ்ந்துடல் சாய்க என
மறத்தமிழ் மாது கூறினள் ; மாவீரன் சென்ருன்.

(வேறு)

மதமிகு களிற்றின் கூட்டம் மலையெனக் குவிந்து செல்ல
இளங்களிறு ஒன்று அங்கே இடையிடை நுழைந்து செல்ல
பெருங்கடல் ஒலித்ததொப்பப் பேரிடி முழக்கம்போல
எழுந்தது யானைக்கூட்டம்.

வலிவுடைப் புரவிக் கூட்டம் ஆவிபோல் பறந்துசெல்ல
நீலவான அளவைத் தூசி நிலத்தினின் றளந்து பார்க்கக்
குளம் பொலிமுழக்கம் அங்கே கொடுகொட்டி முழக்கம்
இசைத்தது புரவிக் கூட்டம். [போல

(வேறு)

பாலினைப் பழிக்கும் வெண்மை ; நல்ல
பஞ்சினிற் சிறந்த வெண்மை ; மை
எனக் கருத்த கண்கள் ; மான்
எனச் செவிகள் நிமிர்ந்து ; வாளைமீன்
எனத் திரண்ட துடைகள் ; காற்
றெனப் பறக்கும் புரவி ; பூட்டிய
தேர்கள் பல ; பொற்கோயில்போலப்
போர்க்கள மிசை வந்து நின்றன.
குன்றுபோல் தோள்கள்
பளிச்சிடும் வாள்கள் ;
அனல்போல் உள்ளம் கொண்டு,
ஆர்ப்பரித்து நின்றாரங்கே,
தீயெனச் சிவந்த கண்கள் செப்பின
" மாசிலாத் தமிழர் கூட்டம்,

மானமே பெரிதாய்க் கொண்ட
மறவர்தம் கூட்டம்" என்று.

(வேறு)

இமயமும் மேருவும் எதிர்த்தெதிர்த்து மோதுதல்போல்
இருபடைத் தோள்களும் உராய்ந்துராய்ந்து மோதின
பேரிடி இடித்தல்போலப் பெருமின்னல் மின்னல்போல
தீப்பொறி பறந்தன தினவுறு தோள்கள் சேர்ந்தே !

(வேறு)

வீழ்ந்தனர் பல்லோர் ; வீறுகொள்
தமிழரிற் சிலரும் வீழ்ந்தனர்
கரங்களை இழந்தனர் ; நற்காளைகள்
சிரங்களை இழந்தனர் ; திறங்கொள்
மறவர்தம் மார்பில் புதைந்தன வேல்கள்
குமுதமுகத்தினள் பதிந்த மார்பில்
கொடுவாள் பதிந்தது ; குத்தீட்டி பாய்ந்தது
வடஎல்லைக் குன்றம் போல் வளர்ந்தது பிணத்தின் [கூட்டம்
" தென்னவர் வென்றனர் " என்றது முரசு
தீங்கனிச் சாற்றைச் செவிகள் மடுத்தன
வீரத்தால் நெஞ்சம் விரிந்தது ; கண்கள் விரிந்தன ;
மகிழ்ச்சி வெள்ளம் மடை திறந்தது,
முல்லை முறுவலை உதிர்த்தது செவ்விதழ்
வாசலில் நின்ருள் வாளினைப் பழிக்கும் கண்ணுள் ;
குமுதக்கரத்தால் தீப ஒளிச்சுடரை ஏற்றினுள்
கணவனை முன்னிறுத்தி ஆரத்தீ எடுத்தாள்
அவள் உள்ளம் மகிழ்ந்தது ! மகிழ்ந்தது தென்னகம் !

# மஞ்சி விரட்டு

மாநிலம் செழிக்க எண்ணி
மஞ்சி கூடிட மகிழ்வார்,
கழனிகள் செழிக்க எண்ணி
கருத்தினில் கருத்தை வைப்பார்,
காளையை ஓட்டி நல்ல
கழனியை உழுது வைப்பார்,
விதையினைத் தூவி மிக்க
விளைச்சலில் கவனம் வைப்பார் !

கழனிகள் செழித்து நல்ல
கதிரினைத் தாங்கும் காலை
கிடையொடு மக்கள் அங்கே
கிடந்துமே காப்பார் அதனை
மதலையைக் காக்கும் தாய்போல்
வளம்நிறை வயலைக் காப்பார்
இராப்பகல் விழித்து அந்த
விளைவினை மனதில் வைப்பார் !

விளைந்தபின் அறுத்து அதனை
வேறு வேருய்ப் பிரித்து
களத்தினில் அடித்து நல்ல
கார்வேறு பதர் வேருக்கி

மூட்டையில் கட்டிக் கட்டி
மொட்டை வண்டிகளில் ஏற்றி
மச்சடைத்த வீடு நோக்கி
முடுக்குவர் காளை தன்னை.

விளைந்த நெல்எல்லாம் கொண்டு
வீட்டிற்குப் போகு முன்னே
தைப் பொங்கல் வந்துநிற்கும்
தரணியெல்லாம் மகிழ !
பொங்கலுண்டு மகிழ்ந்த பின்னே
புதுப் பொலிவு ஆடையொடு
மங்கையரும் காளையரும் மனம்
மகிழ்ந்துற வாடிடுவர்.

பின்னர் மஞ்சிவிரட்டு விழா
பெருவிழாவாய்க் கொண்டாட
வஞ்சி யெல்லாம் தான்வளர்த்த
வலிமை மிகு காளைகளை
கஞ்சமலர்ப் பட்டுடுத்தி
களத்துக்குக் கொண்டு வந்து
மஞ்சி விரட்டு என்று
மனம் மகிழ விட்டிடுவர்.

மஞ்சிதனை விரட்டி விட்டால்
மாநிலத்தார் வாழுவரோ ?
பஞ்சமின்றி மாநிலமும்
கொஞ்சி மகிழ் வெய்திடுமோ ?

எஞ்சியுள்ள நெற்கதிர்கள்
மஞ்சியினுல் சேத மின்றி
மாமனைகள் ஏகுதற்கு
மஞ்சிதனை விரட்டு கின்ருர் !

(வேறு)

பாம்பெனச் சீறும் காளை ; நல்ல
பரல் என ஒளிரும் கண்கள் ; கூர்
வாள் என விளங்கும் கொம்பு ; சிறு
குன்றெனச் சிறந்த திமிலும் ; சிற்ப
மெனவார்த்த நல்லுடலும் கொண்டு
காற்றெனப் பாய்ந்து வரும்
கடும் விசைக் காளை காண்பார் !

(வேறு)

கண்டதும் காளை தன்னை
காளையாய் மாறிடுவார்
வாலினைப் பிடித் திழுப்பார்
வலிமைமிகு நல்லிளைஞர்
காலினைப் பிடித்துப் பின்னர்
காளையைத் தரையில் போட்டு
மாலையை மஞ்சள் துண்டை
கழற்றித்தன் கழுத்தில் அணிவார் !

திருமிகு வலிவு கொண்ட
    திறன் மிகு காளைகளை
வலுவுடன் திமிலைப் பற்றி
    வம்புடன் கொம்பைச் சாடி
திமிருகொள் காளை தன்னை
    திடுமென மடக்கித் தள்ளி
மணமலர் மஞ்சத்திற்கு
    மடவரின் வருகை காண்பார் !

காளையைப் பிடித்த பின்னே
    களிகொள்ளும் காளை உள்ளம்
மலர்மதி முகத்தாள் தம்மை
    மனைவியாய் ஏற்க நெஞ்சம்
அலரினை ஈந்த காலை
    அகத்தினில் துயரம் கொண்டு
பலர்நாண இன்பம் கொண்டு
    வாழ்க்கையைத் துவங்கு மாறே !

# தென்றல்

பொழிலிடைத் தென்றல் வந்து
புதுநடம் செய்குதடி
பொன்மலர் மேனிதனில்
புத்துயிர் அளிக்குதடி
கதிரவன் உதித்தவுடன்
களிநடம் புரிகுதடி
கணவன் வருமுன்னே நம்மைக்
தட்டித் தழுவுதடி
மாமலர்த் தென்றலினால்
நம்மனம் மகிழுதடி
மதியவன் தண்ஒளியில்
நல்லின்பம் நல்குதடி
தீஞ்சுவைக் கனிரசம்போல்
தென்றல் வந்து இனிக்குதடி
நம் அத்தான் வருமட்டும் அது
நம்மை அணைத்தே இருக்கட்டும்.

# நீ பார் !

புள்ளி மயில் ஒன்றங்கே ஆடுது பார் !
முல்லை மலர் இதழ்விரித்துச் சிரிக்குது பார் !
வண்டினங்கள் மலர் மீது அமருது பார் !
மகரந்தம் தனைச் சுமந்து ஏகுது பார் !
தேன் மழலை மொழிபேசும் கிள்ளைஒன்று
செம்பவள வாய்திறந்து பேசுது பார் !
குயில் ஒன்று மரக்கிளையில் கூவுது பார் !
குரங் கொன்று மரம் பலவும் தாவுது பார் !

# பொங்கல் வாழ்த்து

தென்றல் இனிது ; தேன் இனிது ;
செந்தமிழ் இனிது ; தீஞ்சொற் கவி இனிது ;
மழலை இனிது ; மாதர்குரல் இனிது ;
மற்றுமுள செல்வங்களெல்லாம்
இனிது இனிது இந்நாட்டில் !
காவிரியும் வைகையும்
கண்கவரும் பொய்கையும்
பூவிரியும் சோலையும்
இனிதேதான் இந்நாட்டில் !
எத்தனைதான் சேர்ந்து
இனிதினிதே யானலும்
இனிக்கின்ற தைப்பொங்கல்
என்றும் இனிது தமிழர்க்கு !

# உன்னோடு வாழ்தல் அரிது !

உலகத்தை வட்டமிட்டு ஓர் நொடியில் வந்து
கலகத்தை மூட்டு கின்றாய்,
வழியிலே மயில்போல மாதரைக் கண்டால்
சிலையாக உள்ளத்தில் செதுக்கி வைக்கின்றாய்,
பலகாலும் முயன்று நீ பயின்றதை மறந்து
அல்லற் படுத்துகின்றாய்,
தீதான செயல்களில் மிகநாட்டம் கொண்டு
திரிந்தலைந் துழலுகின்றாய்,
புதிதாகக் கற்பனைக் கோட்டைகள் பலகட்டிப்
பேராசை கொள்ளுகின்றாய்,
கிட்டாத பொருளுக்குக் கொட்டாவி விட்டு
நெஞ்சினை உருக்கு கின்றாய்,
உள்ளத்தில் ஆயிரம் எண்ணத்தை வகுத்து
மூடிநீ மறைக்கின்றாய்,
அறியாது செய்த பல புரியாத செயல்களை
நினைந்து நீ சிரிக்கின்றாய்,
துணிவாக நின்று நீ காரியம் செய்திடச்
சஞ்சலம் கொள்ளுகின்றாய்,
குறும்பான குரங்குபோல் மரத்துக்கு மரம்தாவி
வேதனைப் படுத்துகின்றாய்,
பொல்லாத மனமே கொல்லாமல் கொல்லும்
உன்னோடு வாழ்தல் அரிது.

# கலையும் வாழ்வும்

கலை, வாழ்க்கைக்குப் பயன்பட வேண்டும். வாழ்க்கைக்குப் பயன்படாத கலையைக் கலையெனக் கூறுதல் பொருந்தாது. ஆயினும் நம்மில் சிலர் கலை கலையாகவே இருக்கவேண்டும், அதனைக் கண்டு மக்கள் களிக்கவேண்டும், களிப்பதற்காகவே கலை அமையவேண்டும் என்கின்றனர். மேனாட்டாரிற் சிலர் கவிதையின் பயன் இன்பம் பயப்பதே என்கின்றனரல்லவா? அதைப்போல! கலை வாழ்க்கைக்குப் பயன்படுவதோடு இன்பத்தையும் தருமானால் குற்றமில்லை! ஆனால் இன்பத்தை மட்டும் தருமானால் அந்தக் கலையைக் ''கொலை'' என்று அழைப்பதே சாலச் சிறந்தது. உதாரணமாக இந்தக் கவிதையை, மருண்மாலை நேரத்தில் மஞ்சள் வெய்யிலில் சின்னஞ்சிறு வயலில் விளைந்து கிடக்கின்ற நெற்கதிர்களை வண்ணப் பறவைகள் கொத்திக்கொண்டு செல்லுகின்றன. அதனைக் கலைக்கண் கொண்டு ஒரு ஓவியன் காண்கிறான். அவனது உள்ளத்திலே ஓர் கலை உணர்ச்சி ஏற்படுகிறது. அந்த வயலின் அருகிலே ஒரு குடிசையும் அந்தக் குடிசையின் வாசலிலே! ஐந்தாறு சிறுர்கள் விளையாடுவதையும் அதனை ஒரு கிழவன் கண்டு மகிழவதையும் அக்கலைஞன் காண்கிறான். உடனே ஓர் ஓவியம் வரைய

வேண்டுமென்ற எண்ணம் உண்டாகிறது. தான் தீட்ட எண்ணும் ஓவியத்திற்குக் கருப் பொருளாக அக் காட்சியைக் கொள்கிருன். எனவே, நெற்கதிர்களை வீணக்கும் குருவி களைக் கண்டும் அவற்றை விரட்டாமல் வாளா இருக்கிருன். சற்று நேரத்தில் உழவன் அதைக் கண்டதும் அவனுக்கு எழுகின்ற கோபத்தைப் பாருங்கள். சித்திரம் எழுதும் எண்ணத்திலே சிந்தை மகிழ்ந்திருந்த ஓவி யனை, "சித்திரம் தீட்டும் அழகோ நன்று" என்று கூறி ஓட்டுகிருன் பாருங்கள். இங்கே உழவனும் கலை கலை என்று கூத் தாடினல் அவன் வயிற்றுப் பிழைப்பு என் னுவது? ஆகவே, "கலை" மனித வாழ்க்கை யுடன் இணைந்திருக்க வேண்டும். இங்கு "காண்டேக"ரின் கருத்து கையாளப்பட் டிருக்கிறது.

மாலைப் பரிதிதன் மஞ்சள் பொலிவை
வாரி இரைத்தான் மாநில மெங்கும்
வளர்ந்து முதிர்ந்து சாய்ந்த நெல்லின்
கதிர்கள் தலையைச் சாய்த்துக் கிடந்தன.
தங்க ஒளியில் மின்னின கதிர்கள்
நீலவண்ணப் பறவையும் பெடையும்
நிறைந்த அழகுச் சிட்டுக் குருவியும்
விரைந்து பறந்து வயலில் அமர்ந்து
கதிர்மணிக் கொத்தைக் கௌவிப் பறந்தன.
விரைந்து விரைந்து பறந்து வந்து
விளைந்த நெல்லின் மாமணிக் கதிர்களை
கௌவிக் கௌவிப் பறந்து சென்றன.

வயலோ சிறிது ; விளைவோ குறைவு
வானில் திரியும் வண்ணப் பறவைகள்
வீணே கதிரை முறித்துச் சென்ருல்
உழவன் பாடு முழும் பாடாகும் !
வயலின் வெளியில் வரப்பின் மீது
மெதுவாய் நடந்து அழகினைக் கண்டு
சிரித்துச் சிரித்துச் சிந்தையில் மகிழ்ந்தும்
ரசித்து ரசித்து அகத்தினில் நினைந்தும்
இன்பொடு அங்கே நின்ருன் ஒருவன் !
அருகினில் அமைந்த குடிசையின் முன்னே
ஐந்தாறு சிறுவர் ஆடினர்.
மழலையும் இளமையும் மருவித் திரிந்த
குழந்தைகள் சிலரில் கோவணமில்லை !
கருத்த மேனியும் சிரித்த முகமும்
சில பல ।।ற்களை இழந்த வாயும்
அழுக்குக் கந்தையை அரையினில் அணிந்தும்
திரண்ட தடியைக் கரத்தினில் பிடித்தும்
நிமிர்ந்து சிரித்து நின்ருன் கிழவன் !
பேரக் குழந்தைகள் பெரு விளையாட்டில்
கூடிக் களித்தான் ; குழந்தையானுன் !
மழலைக் குழந்தைகள் ஆடி மகிழ்வதை
மனதினில் கொண்டான் ; வயலினை மறந்தான் ;
சிட்டுக் குருவிகள் வட்டமிட்டுச்
சிரித்துப் பறப்பதை நினையானுகி
போதையில் கிடக்கும் குடியனைப் போல
குழந்தைகள் மழலையில் போதையைக் கண்டான் !

" தாத்தா ", " தாத்தா " என்றான் சிறுவன்
கிழவன் தன்னிலை உணர்ந்தான்
" என்னடா " என்று மென்மையாய்க் கேட்டான்.
" காவற்காரன் காவலை மறந்தான்
சொத்துக்களெல்லாம் சூறைபோயின "
என்றான் சிறுவன் சிரித்துக் கொண்டே !
திரும்பிப் பார்த்தான் கழனியை
திக்கென இதயம் திகைத்து நின்றது.
வரப்பினில் ஒருவன் சிரித்து மகிழ்வதைக்
கண்டான் கிழவன் ! உள்ளம் கொதித்தது ;
அருகினில் வந்து, " அப்பா " என்றான்,
சிரித்தவன் சிந்தை திரும்ப வில்லை.
மீண்டு மோர்முறை, " ஐயா " என்றான்
மேலும் மகிழ்ந்து சிரித்தான் அவனும் !
சிந்தை கொதித்த கிழவன் சீறினான்
கொள்ளை போவதைப் பார்த்துப் பார்த்துக்
குதித்துச் சிரிக்கும் கோமாளியோ நீ !
இல்லை ஐயா எழிலைப் பாரும் !
எத்தனை குருவிகள் எவ்வளவு அழகு
தங்கக் கதிரைக் கொத்திப் போகும்
அழகினைப் பாராய் ! இன்பம் காணாய் !
அழகாய் ஒளிரும் பரிதியின் ஒளியில்
மணியாய் மின்னும் கதிரின் குவியலை ;
அழகிய குடிசையை ; உயர்ந்த வரப்பை ;
உனது குழந்தையொடு உன்னையும் சேர்த்து
எழிலாய் ஓவியம் தீட்டித் 'தாரேன்'

இன்பொடு இங்கே அமருக என்ருன் !
கிழவன் மீசை துடித்தது ;
" ஓவியம் தீட்டும் அழகோ நன்று !"
ஒதுங்கிப் போவாய் நல்ல வேளேயில் !
என்று கூறி விரைந்து விரட்டினன்
குருவிகள் அனைத்தும் பறந்தன வானில் !

# அவஞேர் கவிஞன்

பொன்னின் பொடியோ,
மின்னிடும் வயிரமணித்துகளோ,
சிப்பியின் முத்துச் சிதறலோ,
என்று வியக்கும் வகையில்
விரிந்து கிடக்கும் மணற்பரப்பில்
சென்று சென்று தினம் தினம்
சிந்தை மகிழ்ந்து அமர்ந்திடுவான் !

பேசா விரதம் பூண்டவன் போல்
பிறவி ஊமைச் செவிடன்போல்
ஒன்றும் அறியா அறிவிலிபோல்
உண்மை தெரியா பேதையைப்போல்
தனியாய் அமர்ந்து மகிழ்ந்திருப்பான்
தாரணி உணர்ந்த கலேஞனவன் !

விண்ணில் நிலவு வந்ததுமே
விரைந்து வளரும் காதலும்தான் !
பேசாதிருந்த பெருங்கலேஞன்
உளத்தால் பேசிச் சிரித்திடுவான் !
கரத்தை நீட்டி அழைத்திடுவான்
மின்னிச் சிரிக்கும் பெருநிலவு !

தெள்ளிய வெள்ளலை காட்டி
தீந்தமிழ் ஓசை கூட்டி
பல்பொருள் சுவைக்கச் சொல்லி
பாபல இசைத்து மகிழும்
பாவலன் ! அவன்தான் கவிஞன் ! வாழ்க !

# மீன் பிடிப்போர்

காலைக் கதிரவன் உதிக்கு முன்னே
நீள் கடல் நோக்கிச் செல்லுகின்றோம் !
மாலையில் ஞாயிறு மறையும் வரை
அலைகடல் அலைகளில் ஆடுகின்றோம் !
ஆழ் கடல் ஆழத்தை அளந்தளந்து
நூல் வலை விரித்து மீளுகின்றோம் !
நாலுபேர் சேர்ந்து வலை விரித்து
நாற்புரம் நின்று வலை இழுத்து
சேர்ந்திடும் மீனை ஓடத்தில் கொட்டி
திரும்பிடுவோம் கரை நோக்கி !

வீணில் அலைந்து திரும்புவோரும்,
வெறுங்கையோடு திரும்புவோரும்,
காற்றின் விசையால் நெடுந்தூரம்
கடுகி ஓடும் படகுடனே
வேதனையோடு சென்று பின்னர்
சிலநாள் கழித்தும் மீள்குவமே !

கடலின் நடுவில் சில சமயம்
கடுங்கண் சுறவும் வருவதுண்டு !

சுருவைக் கண்டதும் எல்லோரும்
சூழ்ந்து கொண்டு வலை வீசி
கிட்ட நெடுங்கும் சிலபேரை
வாலால் அடித்தும் விடுவதுண்டு !

இரும்புக் கயிற்ருல் அடித்தாலும்
இழைநேர் சவுக்கால் அடித்தாலும்
யானை வாலால் அடித்தாலும்
" பொசுக்கென"த் தடவி நிமிர்ந்திடலாம்,
மீனின் வாலால் அடிபட்டால்
உள்ளெலும் பெல்லாம் முறிந்திடலாம் !

மீனைப் பிடித்து எல்லோரும்
ஓடத்தின் மேலே ஏற்றிடுவோம் !
கரைக்குத் திரும்ப முனைந்து விட்டால்
" ஹைலசா " பாட்டும் பாடிடுவோம் !
மிடுக்குடன் நாங்கள் ஆடிக்கொண்டு
மிக்க மகிழ்வுடன் வந்திடுவோம் !

# வேட்டை

தோள்வலி மிக்க இளைஞர் பலர்
தோன்றினர் அந்தக் கா நடுவில்
ஏனென்று கேட்பார் இல்லாததால்
எக்காள மிட்டுத் திரிந்தனரே !

வெண்கல மலையதில் இடி யொன்று
வீழ்ந்து ஒலியைச் சிதறிடுங்கால்
கிண்கிணி ஒலியும் கிளம்புமன்றோ ?
அந்தக் கிண்கிணிச் சிரிப்பை உதிர்த்தனரே !

காட்டில் எங்கணும் அந்த ஒலி
கல கலவெனவே எதிரொலித்து
சாற்றிடும் வீரர் வந்தாரென்று
சங்கடம் நிறைந்த விலங்குகட்கே !

ஒவ்வொரு புதரிலும் உள் நுழைந்து
" ஊய் ", " ஆய் " என்றே ஓலமிட்டு
காட்டைக் கலைத்து விட்டனரே !
கானில் வேட்டை யாடினரே !

முயலும் மானும் முள்ளம் பன்றியும்
மயிலும் குயிலும் மருண்டு பறந்தன.
வில்லும் அம்பும் எடுத்தனர் வீரர்
விரைந்து அதன்மேல் தொடுத்தனர் அம்பை !

முறைத்துச் சிலிர்த்து வந்தது பன்றி
முட்கள் அனைத்தையும் விரித்துக் கொண்டே !
கண்டார் மறவர் களிகூர்ந்தார்
கொன்ருர் அதனை நொடிப் பொழுதில் !

எங்கோ இருந்து யானை ஒன்று
இமயம் போல வந்ததுவே !
மலைபோல் மேனி இருந்தாலும்
மானினும் வேகமாய் வந்ததுவே !

வேலை எடுத்துக் குறி பார்த்து
வேழத்தின் மீது எறிந்தனரே !
வீரிட்டு வேழம் ஓலமிட்டு
விரைந்து வந்தது எதிர்நோக்கி !

கூரிய வாளை மேலுயர்த்தி
கொன்றிட நின்ருர் வீரர்களும் !
" திடு "மென அந்த வேளையிலே
கடும்புலி ஒன்று பாய்ந்ததுவே !

துதிக்கையைத் துண்டித்துப் போட்டவுடன்
துவண்டு விழுந்தது மதயானை,
பாய்ந்த புலியைச் சூழ்ந்துகொண்டு
பலரும் அம்பை எய்தனரே !

எய்த அம்பின் துளையாலே
நைந்தது புலியின் நல்லுடலே
எல்லா வீரரும் ஒன்ருகிப்
புலியைக் கொன்றனர் முதன்முதலில் !

# பேராசிரியர் சுந்தரனார்

நல்ல கனி பிழிந்து நறுமலரின் மணம் சேர்த்துப்
பல்லோர் புகழும் நற்காவியம் தந்தான்
இல்லையென்று சொல்லும் இசைத்தமிழ் நாடகத்தைக்
கல்லார் இருப்பரோ ஈங்கு ?

" கன்னடமும் களி தெலுங்கும் கவின் மலையாளமும்
துளுவும்
உன் உதரத்துதித் தெழுந்து ஒன்றுபல ஆயிடினும் "
என்றியம்பி நூல்வடித்த சுந்தரத்தின் திறத்தைச்
சிந்தியாதிருப்பரோ ஈங்கு ?

சிந்தைக் கினிய செவிக்கினிய தமிழ்க் கவிதை
சங்கத் தமிழைச் சாற்றும் தமிழ்க் கவிதை
பங்கமிலாத் தமிழ்க் கவிதை தந்த சுந்தரன் புகழ்
வாழ்க பல்லாண்டு ! வாழ்க பல்லாண்டு !

# திரு. வி. க.

செந்தமிழின் காவலனும் தென்றல் மொழி பேசும்
திரு. வி. க.
எந்தமிழன் பெண்குலத்திற்கு எப்போதும்
உழைத்திட்டான் ;
இனிமைமிகப் பேசவல்லோன் ; எழில் மிக்க
நடையழகன் ;
தொழிலாளர் நலம்பேணித் தொண்டு பல
செய்திட்டான்
மொழிநிகர் குணத்தோன் ; நல்ல நூல் பல
தந்த முதியோன் ;
போராட்ட மாவீரன் ; புனித நற்றமிழின் தொண்டன்!
விடுதலை முரசின் பேரொலி கிளப்பிய
எந்தை திரு. வி. கலியாண சுந்தரன் புகழ்
வாழ்க ! வாழ்க !

# ஒரு வரம் அருள்வாயம்மா

பல்லவி

ஒரு வரம் அருள்வாயம்மா—உளம்கனிந்(து)
ஒரு வரம் அருள்வாயம்மா

அனுபல்லவி

பொன்னும் நவமணியும்
கல்லும் கசிந்துருகும்
இன்னிசைக் கீதத்தில்
உன் எழில் சேர்த்துக் கவிபாட...(ஒரு வரம்)

சரணம்

தென்றல் வந்து
சுகமளித்திட
தேன் சுவைக் கீதம்
இன்பம் பயத்திட
செந்தமிழ் மொழியில்
காவியம் பாடிட
குமரித் தாயே
அருள்வாயம்மா !

# அற்புதக் காட்சிதானய்யா

பல்லவி

அற்புதக் காட்சி தானய்யா—கண்ணுக்கு
ஈதோர் அற்புதக் காட்சிதானய்யா

அனுபல்லவி

ஒயிலான எழில் மாது
புதிதான அழகோடு
கைலாய பீடத்தில்
மயில் போல ஆடிடும் காட்சி......(அற்புதக்)

சரணம்

தில்லையில் ஆடிய நின் திருக்கூத்தும்
காமனை அழித்த உன் சாகசக் கூத்தும்
இடுகாட்டில் நீ ஆடும் கொடுகொட்டிக் கூத்தும்
ஈடாமோ இம் மங்கையின் கூத்துக்கு... (அற்புதக்)

# எப்போ வருவாரோடி

பல்லவி

எப்போ வருவாரோடி—என்னுள்ளம்
ஏங்கித் தவிக்குதடி

அனுபல்லவி

பாடி மகிழ்ந்து
பக்கத்தில் அமர்ந்து
கூடிக் குலவிக்
கொஞ்சிடக் காதலர்...... (எப்போ)

சரணம்

பூமியில் விளைந்திடும்
பொன்னையும் மணியையும்
சிப்பியின் முத்தையும்
சிவப்பையும் பச்சையும்
விற்றுப் பொருளீட்ட
வெளிநாடு சென்றவர்
பேரலை வீசிடும்
பெருங்கடல் கடந்துமே...... (எப்போ)

16093



இந் நாவலாசிரியரின் அடுத்த எழுத்தோவியம்

# அணையா விளக்கு

(நாடகம்)

சிந்தனைச் சித்திரம், அழகுற அமைந்த

அற்புத ஓவியம், தீஞ்சொல் காவியம்

படிக்கவும் நடிக்கவும் ஏற்றது.